முழுப்பதிப்புரிமையுடையது

அந்தரங்கமானது

# இலங்கை பரீட்சைத் திணைக்களம்

# க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

# 42 - கர்நாடக சங்கீதம்
# புள்ளியிடும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன.

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
## க.பொ.த (சா.தர)ப் பரீட்சை — 2022 (2023)
## 42 — கர்நாடக சங்கீதம்
## புள்ளி வழங்கும் திட்டம்

கர்நாடக சங்கீத பாடநெறியானது,

| | | | |
|---|---|---|---|
| வினாப்பத்திரம் | - I | - | 40 புள்ளிகள் |
| வினாப்பத்திரம் | - II | - | 60 புள்ளிகள் |
| மொத்தம் | | - | 100 புள்ளிகள் |

### புள்ளித்திட்டத் தொகுப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (அ) | கர்நாடக சங்கீத வினாப்பத்திரம் I | = | 40 x 1 | = | 40 புள்ளிகள் |
| (ஆ) | கர்நாடக சங்கீத வினாப்பத்திரம் II | = | 5 x 12 | = | 60 புள்ளிகள் |

### வினாப்பத்திரம் II

**வினா 01ம் வினா**

(i) புள்ளி - 01
(ii) புள்ளி - 01
(iii) புள்ளி - 01
(iv) புள்ளி - 01
(v) புள்ளி - 01
(vi)புள்ளி - 01
(vii) புள்ளி - 01
(viii) புள்ளி - 01
(ix) புள்ளிகள் - 02
(x) புள்ளிகள் - 02 மொத்தப் புள்ளிகள் = 12

**வினா 02 இற்குரிய மொத்தப் புள்ளிகள்** = 12
ஒரு இராகலட்சணத்திற்குரிய மொத்தப் புள்ளிகள் = 12

**வினா 03 இற்குரிய மொத்தப் புள்ளிகள்** = 12
ஒரு விடயத்திற்கான புள்ளிகள் = 06
மொத்தப் புள்ளிகள் 6 + 6 = 12

**வினா 04 இற்குரிய மொத்தப் புள்ளிகள் - 12**

(i) புள்ளிகள் - 04
(ii) புள்ளிகள் - 04
(iii) புள்ளி - 01
(iv) புள்ளி - 01
(v) புள்ளிகள் - 02

**வினா 05 இற்குரிய மொத்தப் புள்ளிகள் - 12**

(i) புள்ளி - 01
(ii) புள்ளிகள் - 03
(iii) புள்ளிகள் - 06
(iv) புள்ளிகள் - 02

மொத்தப் புள்ளிகள் = 12

**வினா 06 இற்குரிய மொத்தப் புள்ளிகள் - 12**

(i) புள்ளிகள் - 08
(ii) புள்ளிகள் - 04

மொத்தப் புள்ளிகள் = 12

**வினா 07 இற்குரிய மொத்தப் புள்ளிகள் - 12**

(i) புள்ளிகள் - 02
(ii) புள்ளிகள் - 04
(iii) புள்ளிகள் - 04
(iv) புள்ளிகள் - 02

மொத்தப் புள்ளிகள் = 12

**அல்லது**

**வினாவிற்கான மொத்தப் புள்ளிகள் - 12**

**க.பொ.த (சாதாரண தர)ப் பரீட்சை - 2022(2023)**
**விடைத்தாள்களுக்குப் புள்ளியிடலுக்கான பொது நுட்ப முறைகள்**

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன் பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற மைப் பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர் ஊதாநிற மைப்பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும் போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும் போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பின்னங்களாகப் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் ☐ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரீட்சகரினால் புள்ளிகள் பிழையற்றது என உறுதிப்படுத்த நீலநிற அல்லது கறுப்புநிறப் பேனாவினை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ............................................................ ✓ △ $\frac{4}{5}$
............................................................
............................................................

(ii) ............................................................ ✓ △ $\frac{3}{5}$
............................................................
............................................................

(iii) ............................................................ ✓ △ $\frac{3}{5}$
............................................................
............................................................

(03) $\quad (i)\ \frac{4}{5} + (ii)\ \frac{3}{5} + (iii)\ \frac{3}{5} = \boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள்**

1. **துளைத்தாள் தயாரித்தல்**

I. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.

II. அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.

III. துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக் கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.

IV. சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.

**V. வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**

2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்து விட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.

3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை √ அடையாளத்தாலும் பிழையான விடையை X அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளினால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும், **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கங்கூடிய இடங்களில் √ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை குறிப்பிடும் போது ஓவலண்ட் கடதாசியின் இடது பக்க நிரலைப் பயன்படுத்தவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன்பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக **2 இலக்கங்களில் பதியவும்.** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டிவிடவும்.
4. மொத்தப் புள்ளிகளை கவனமாக கூட்டி முன்பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் ஒவ்வொரு விடைக்கும் வழங்கப்பட்டுள்ள புள்ளிகளின் தொகையினை ஒவ்வொரு பக்கமாக கூட்டவும். அக்கூட்டுத்தொகை உங்களால் முன்பக்கத்தில் மொத்தம் எனக் குறிப்பிட்ட மொத்தபுள்ளிகளுக்கு சமமானதா? என பரீட்சிக்கவும்?

**★ புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

I. ஒரு வினாப்பத்திரம் உள்ள பாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்பட மாட்டாது.

II. ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியான புள்ளிப்பட்டியலில் பதியப்படவேண்டும்.

III. வினாப்பத்திரம் I இற்கான புள்ளிப்பட்டியலில் **"Total Marks"** என்ற நிரலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

IV. வினாப்பத்திரம் II இற்கான புள்ளிப்பட்டியலை தயார் செய்யும் போது பகுதிப் புள்ளிகளைப் பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப் புள்ளிகளை புள்ளிப் பட்டியலில் **"Total Marks"** என்ற நிரில் பதியவும்.

V. 43 சித்திரப் பாடத்திற்குரிய I,II மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியிலில் **பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும்.**

VI. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப் பட்டியிலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப் புள்ளிகளை உள்ளடக்கி அவ் வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை, புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கிய குறிப்பு:**

I. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப் புள்ளியானது முழுத்தானத்தில் புள்ளிப் பட்டியலில் பதியப்படுதல் வேண்டும். எந்த விதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் இறுதிப் புள்ளியானது தசம தானங்களில் பதியப்படலாகாது.

II. புள்ளிப் பட்டியலின் சகல பக்கங்களிலும் புள்ளிகளைப் பதிந்த உதவிப்பரீட்சகர், புள்ளிகளை சரிபார்த்த உதவிப்பரீட்சகர், மதிப்பீட்டுப் புள்ளிகளை உறுதிப்படுத்தும் எண்கணித பரீட்சகர் மற்றும் பிரதம பரீட்சகர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**42 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

කර්ණාටක සංගීතය **I, II**
கர்நாடக சங்கீதம் **I, II**
Carnatic Music **I, II**

පැය තුනයි
*மூன்று மணித்தியாலங்கள்*
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - **10** நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## கர்நாடக சங்கீதம் I

அறிவுறுத்தல்கள் :

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் நீங்கள் தெரிவுசெய்த விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பின்வரும் ஜதிச் சொற்களில் கண்ட நடைக்குப் பொருத்தமானது
(1) தகிட (2) தகதிமி (3) தகதகிட (4) தகதிமி தகதகிட

**2.** பஞ்சபுராணத்தில் திருவிசைப்பாவிற்கு அடுத்ததாக சுத்தாங்கமாகப் பாடப்படுவது
(1) தேவாரம் (2) திருமந்திரம் (3) புராணம் (4) திருப்பல்லாண்டு

**3.** ஆரோகணத்திலும் அவரோகணத்திலும் காந்தாரம், தைவதம் வர்ஜமாக வரும் இராகம்
(1) ஆரபி (2) தோடி (3) மத்யமாவதி (4) பந்துவராளி

**4.** "தபஜபயோகஞ்செய்" என்று ஆரம்பிக்கும் சரணத்தைக் கொண்ட கீர்த்தனை
(1) உள்ளமிரங்கி (2) இனிநமக்கொரு
(3) அள்ளியுண்டிடலாம் (4) மாயன் குழலிசையில்

**5.** பின்வரும் உருப்படிகளுள் அனாகத எடுப்பில் ஆரம்பிக்கும் உருப்படி
(1) "உன்னையல்லால்..." - சிம்மேந்திரமத்யமம் - ஆதி
(2) "ஆடும் கலாப மயில்..." - கல்யாணி - ஆதி
(3) "சிவகாம சுந்தரி..." - முகாரி - ஆதி
(4) "மயில்வாகனா..." - மோகனம் - ஆதி

**6.** பமரி ஸரிகம இங்கு பயன்படுத்தப்பட்டுள்ள இசைக் குறியீடு
(1) ஏற்ற ஜாரு (2) வளைவுக்கோடு (3) படுக்கைக்கோடு (4) கமகம்

**7.** ஷட்ஜம் பஞ்சமம் உட்பட ரி கி மி த நி என்னும் ஸ்வர சங்கேதங்களை எடுத்துக்கொள்ளும் ராகம்
(1) கரஹரப்பிரியா (2) கீரவாணி (3) கல்யாணி (4) ஷண்முகப்பிரியா

**8.** பின்வரும் கூற்றுகளில் வீணை வாத்தியத்திற்குப் பொருந்தாத கூற்று
(1) தாளத் தந்திகளையுடைய வாத்தியமாகும்.
(2) வாத்தியங்களின் அரசியாகக் கருதப்படுவது.
(3) இது ஒரு காற்று வாத்தியமாகும்.
(4) மெட்டுக்களையுடைய வாத்தியமாகும்.

**9.** "பண்டுநால்வருக்கு........" என்னும் தேவாரம் பாடப்பட்ட தலம்
(1) திருக்கேதீச்சரம் (2) திருக்கோணேஸ்வரம்
(3) திருவீழிமிழலை (4) திருப்பிரமபுரம்

**10.** பா, மபாமகரீசுரிஸா என்னும் ஸ்வரக் கோர்வையின் மொத்த அட்சர எண்ணிக்கை
(1) 12 (2) 13 (3) 14 (4) 15

**11.** செம்பாலைப்பண் குறிக்கும் கர்நாடக இராகம்
(1) கரஹரப்ரியா (2) தோடி (3) சங்கராபரணம் (4) ஹரிகாம்போஜி

**12.** சியாமாசாஸ்திரி அவர்களின் சொத்து என சிறப்பிக்கப்படும் இராகம்
(1) பைரவி (2) ரீதிகௌளை (3) ஆனந்தபைரவி (4) சாவேரி

**13.** ஹிந்துஸ்தானி இசைக்கச்சேரியில் பிரதானமாக வாசிக்கப்படும் தாள வாத்தியம்
(1) டோல்கி (2) தபேலா (3) ஸாரங்கி (4) ஷெனாய்

**14.** திருப்பாம்புரம் டி. என். சுவாமிநாதபிள்ளை அவர்களால் வாசித்துப் பிரபல்யமடைந்த இசைக்கருவி
(1) புல்லாங்குழல் (2) வீணை (3) மிருதங்கம் (4) நாதஸ்வரம்

**15.** வில்லுப்பாட்டு இசைத்தலின்போது வில்லின் இடப்புறம் நாண்கயிற்றினால் இணைக்கப்படும் வாத்தியம்
(1) விற்கடம் (2) டோலக் (3) உடுக்கை (4) சலங்கை

**16.** பின்வருவனவற்றுள் பதம் பற்றிய கூற்றுகளுள் மிகப்பொருத்தமானது
(1) தமிழ்ப்பதங்கள் பெரும்பாலும் கிருஷ்ணன் மீது பாடப்பட்டவையாகும்.
(2) பதங்கள் அப்பியாசகானத்திற்கும் சபாகானத்திற்கும் பொதுவானவையாகும்.
(3) சிருங்கார ரசத்தையும், பக்தி உணர்வையும் வெளிப்படுத்தும் உருப்படி ஆகும்.
(4) நாட்டிய நிகழ்ச்சிகளில் இறுதியில் இடம்பெறும் உருப்படி ஆகும்.

**17.**

| $I_5$ | O | $I_5$ |
|---|---|---|
| ஸரீகரி | ஸரி | ஸரிகாம |
| ரிகாமக | ரிக | ரிகமாப |

மேலே தரப்பட்ட அலங்காரத்தின் மூன்றாவது ஆவர்த்தனமாக வருவது
(1) கமபாம கம கமாபத (2) காமபம கம காமபத
(3) கமாபம கம கமபாத (4) காமபத கம காமபத

**18.** ஆரோகண அவரோகணத்தில் வரிசைக்கிரமமின்றி திரிந்து வரும் இராகங்களில் ஒன்று
(1) பிலஹரி (2) கமாஸ் (3) மோகனம் (4) ஹம்சத்வனி

**19.** "முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்" என்ற தேவாரத்தைப் பாடியவர்
(1) திருஞானசம்பந்தர் (2) மாணிக்கவாசகர்
(3) சுந்தரர் (4) திருநாவுக்கரசர்

**20.** எல்லா அங்கங்களிலும் சாகித்தியத்தைக் கொண்ட உருப்படி
(1) ஆடவர்ணம் (2) தில்லானா (3) தானவர்ணம் (4) ஜதீஸ்வரம்

**21.** திருநெல்வேலி, தென்காசி போன்ற இடங்களிலுள்ள சில ஆலயங்களில் தேவாரம் பாடும்போது வாசிக்கப்படும் ஹிந்துஸ்தானி வாத்தியம்
(1) சித்தார் (2) ஸ்ரோட் (3) ஸாரங்கி (4) ஷெனாய்

**22.** வயலின் வாத்தியத்தின் தந்திகளை சுருதி சேர்க்கும்போது அதன் ஒழுங்கு முதலாம் தந்தியிலிருந்து முறையே வருவது
(1) DGAE (2) EADG (3) ADGE (4) EDAG

**23.** தமது பெயரையே முத்திரையாகப் பயன்படுத்திய வாக்கேயகாரர்கள்
(1) தியாகராஜ ஸ்வாமிகள், கோபாலகிருஷ்ண பாரதியார்
(2) பாபநாசம் சிவன், முத்துத்தாண்டவர்
(3) தியாகராஜ ஸ்வாமிகள், பாபநாசம் சிவன்
(4) முத்துத்தாண்டவர், கோபாலகிருஷ்ண பாரதியார்

**24.** சப்தஸ்வரங்கள் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களாக பேதமடைவதற்கு காரணமான ஸ்வரங்கள்
(1) விவாதி ஸ்வரங்கள் (2) பிரக்ருதி ஸ்வரங்கள்
(3) கோமள ஸ்வரங்கள் (4) விக்ருதி ஸ்வரங்கள்

**25.** "ஏறுமயில் ஏறிவிளை யாடுமுக மொன்றே" எனும் திருப்புகழ் அமைந்துள்ள சந்த அமைப்பு
(1) தான தனதன தான தனதன தான தன தானா
(2) தானதன தானதன தானதன தானா
(3) தானதன தனதான தானதன தானதானா
(4) தனதன தான தனதனதான தனதானா

**26.** பின்வருவனவற்றுள் அனைத்து இராகங்களும் விவாதி தோஷத்திற்கு உட்பட்டதாகவும் சுத்த மத்யம இராகங்களாகவும் அமைந்துள்ள சக்கரங்கள் முறையே
(1) 2 ஆம் 4 ஆம் (2) 7 ஆம் 12 ஆம்
(3) 1 ஆம் 6 ஆம் (4) 1 ஆம் 7 ஆம்

**27.** பின்வரும் கூற்றுகளில் இராகமாலிகை என்னும் உருப்படியின் இலக்கணம் **அல்லாதது**
(1) குறைந்தது ஏழு இராகங்களாவது இருத்தல் அவசியம்.
(2) பண்டைய காலத்தில் இதனை இராகக் கதம்பம் என அழைத்தனர்.
(3) இதன் சாகித்தியம் பக்திரசம் அல்லது சிருங்கார ரஸத்தை வெளிப்படுத்தும்.
(4) விலோம சிட்டைஸ்வரத்தைக் கொண்டிருக்கும்.

**28.** "சின்னஞ் சிறுக்கிளியே" என்னும் இராகமாலிகையில் "கன்னத்தில் முத்தமிட்டால்" என்னும் பாடல்வரி இடம்பெறும் பகுதி அமைந்துள்ள இராகம்
(1) நீலமணி (2) திலங் (3) வசந்தா (4) காபி

**29.** பண்டைத் தமிழிசையில் துத்தம், தாரம் ஆகிய பெயர்களால் அழைக்கப்பட்ட ஸ்வரங்கள் முறையே
(1) காந்தாரம், நிஷாதம் (2) மத்யமம், தைவதம்
(3) ரிஷபம், நிஷாதம் (4) மத்யமம், நிஷாதம்

**30.** சங்கராபரண இராகத்தில் ரிஷபம், தைவதம் ஆகிய ஸ்வரங்களைக் கோமளஸ்வரங்களாகக் கொண்டால் வரும் இராகம்
(1) கரஹரப்ரியா (2) சக்ரவாகம்
(3) மாயாமாளவகௌளை (4) தோடி

**31.** சங்கீத மும்மூர்த்திகளால் உருவாக்கப்பட்ட இசைப்பீடம்
(1) தஞ்சாவூர் (2) மைசூர் (3) திருவனந்தபுரம் (4) சென்னை

**32.** ஸ நி ப நி ஸ ரிம ப நி ஸ் ரி ஸ் ...

மேலே தரப்பட்ட ஸ்வரக்கோர்வையில் காணப்படும் மந்தரஸ்தாயி, மத்தியஸ்தாயி, தாரஸ்தாயி ஸ்வரங்களின் எண்ணிக்கைகள் முறையே
(1) 4, 5, 3 (2) 3, 6, 3 (3) 3, 5, 4 (4) 4, 6, 3

**33.** பஞ்சபுராணம் ஓதுவதில் திருவாசகத்தின் பின் பாடப்படும் திருமுறை
(1) 6 ஆம் திருமுறை (2) 7 ஆம் திருமுறை
(3) 8 ஆம் திருமுறை (4) 9 ஆம் திருமுறை

**34.** அரடா என்னும் பாகத்தையுடைய வாத்தியம்
(1) நாதஸ்வரம் (2) வீணை (3) மிருதங்கம் (4) தவில்

**35.** "காணாமல் வீணிலே காலம் கழித்தோமே..." என்னும் தன்யாஸி இராகக் கீர்த்தனையை இயற்றியவர்
(1) முத்துத்தாண்டவர்
(2) பாபநாசம் சிவன்
(3) மாயூரம் வேதநாயகம்பிள்ளை
(4) ஊத்துக்காடு வெங்கடஸுப்பய்யர்

**36.** பின்வருவனவற்றில் பாஷாங்க இராகம் ஒன்றிற்கு இணையான பண்
(1) நட்டபாடை
(2) செந்துருத்தி
(3) காந்தார பஞ்சமம்
(4) வியாழக் குறிஞ்சி

**37.** இந்திய சங்கீதத்தில் ஏற்பட்ட பிரிவுகள் பற்றி முதன் முறையாகக் குறிப்பிடும் நூல்
(1) சங்கீதரத்னாகரம்
(2) ஸ்வரமேளகலாநிதி
(3) சங்கீதஸுதாகரம்
(4) சதுர்த்தண்டிப்பிரகாசிகை

**38.** இசையுடன் கூடிய உரையாடல் மூலம் கதையைக் கூறும் நாடகம்
(1) நாட்டிய நாடகம்
(2) இசை நாடகம்
(3) நிருத்திய நாடகம்
(4) ஓரங்க நாடகம்

**39.** பல்லிய நிகழ்ச்சி ஒன்றில் மாணவர் ஒருவர் பங்குபற்றுவதால் பெற்றுக்கொள்ள முடியாத அனுபவம்
(1) பல்வகை வாத்தியங்களையும் அறிந்துகொள்ளுதல்
(2) பல்வகை உருப்படி வகைகளை அறிந்துகொள்ளுதல்
(3) பல்வகை வாத்தியங்களையும் வாசிக்கும் திறனைப் பெறுதல்
(4) ஒத்திசைவு பற்றிய அறிவினைப் பெறுதல்

**40.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - எளிமையான சொற்கள் அடங்கிய சிறுவர் பாடலாக இருத்தல் வேண்டும்.
B - பலவிதமான தாளங்களிலும், நடைகளிலும் அமைக்க வேண்டும்.
C - தத்துவக் கருத்துக்கள் நிறைந்த பாடல்களைத் தெரிவுசெய்ய வேண்டும்.
D - தாம் கேட்டறிந்த மெட்டுக்களில் இசையமைக்க முயற்சி செய்ய வேண்டும்.

மாணவர்கள் சிறுவர் பாடல் ஒன்றினை இசையமைக்கும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய மிகப்பொருத்தமான செயற்பாடுகள்.
(1) A, C (2) A, D (3) B, C (4) B, D

**

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

රහස්‍යයි
அந்தரங்கமானது

# අ.පො.ස. (සා.පෙළ) විභාගය - 2022 (2023)
# க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

විෂය අංකය / பாட இலக்கம்: **42** විෂයය / பாடம்: **கர்நாடக சங்கீதம்**

## I පත්‍රය - පිළිතුරු
## I பத்திரம் - விடைகள்

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 3 | 11. | 4 | 21. | All | 31. | 1 |
| 02. | 4 | 12. | 3 | 22. | 2 | 32. | 2 |
| 03. | 3 | 13. | 2 | 23. | 1 | 33. | 4 |
| 04. | 1 | 14. | 1 | 24. | 4 | 34. | 3 |
| 05. | 1 | 15. | 1 | 25. | 2 | 35. | 1 |
| 06. | 2 | 16. | 3 | 26. | 3 | 36. | 4 |
| 07. | 4 | 17. | 3 | 27. | 1 | 37. | 3 |
| 08. | 3 | 18. | 2 | 28. | 2 | 38. | 2 |
| 09. | 1 | 19. | 4 | 29. | 3 | 39. | 3 |
| 10. | 3 | 20. | 1 | 30. | 3 | 40. | 2 |

විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் } එක් පිළිතුරකට ලකුණු / ஒரு சரியான விடைக்கு **01** බැගින් / புள்ளி வீதம்

මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் **01 × 40 = 40**

---

පහත නිදසුනෙහි දක්වෙන පරිදි බහුවරණ උත්තරපත්‍රයේ අවසාන තීරුවේ ලකුණු ඇතුළත් කරන්න.
கீழ் குறிப்பிடப்பட்டிருக்கும் உதாரணத்திற்கு அமைய பல்தேர்வு வினாக்களுக்குரிய புள்ளிகளை பல்தேர்வு வினாப்பத்திரத்தின் இறுதியில் பதிக.

| | |
|---|---|
| නිවැරදි පිළිතුරු සංඛ්‍යාව | 25 |
| சரியான விடைகளின் தொகை | 40 |

| | |
|---|---|
| I පත්‍රයේ මුළු ලකුණු | 25 |
| பத்திரம் I இன் மொத்தப்புள்ளி | 40 |

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**42 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

## கர்நாடக சங்கீதம் II

※ முதலாம் வினாவையும் வேறு நான்கு வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை தருக.

(i) வேத. பூ. என்னும் சங்கேதத்தினால் குறிப்பிடப்படும் இராகம் யாது?

(ii) 'தாரநந்திரம்' என்னும் பாகத்தையுடைய வாத்தியம் யாது?

(iii) அப்பியாசகான உருப்படிகளுள் சாகித்திய ரூபமாகப் பாடப்படும் முதல் உருப்படி யாது?

(iv) மேகராகக்குறிஞ்சிப் பண்ணிற்கு இணையான இராகம் யாது?

(v) 'மாதர் மடப்பிடியும்' என்ற பதிகத்திற்கு யாழ் வாசித்தவர் யார்?

(vi) முதன் முதலில் மனித பார்வைக்கு வந்த பிரதிமத்யம ராகம் யாது?

(vii) கோவூர்ப் பஞ்சரத்தினக் கீர்த்தனைகளை இயற்றியவர் யார்?

(viii) நாட்டுப் பாடல் முறையில் 'கண்ணன் குழல் வாரக் காக்கையை அழைத்தல்' என்னும் பாசுரத்தைப் பாடியவர் யார்?

(ix) மகேந்திரவர்மன் காலத்தின் இசை வளர்ச்சியை வெளிப்படுத்தும் **இரண்டு** இசைக் கல்வெட்டுக்களும் யாவை?

(x) முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய இரண்டு நவாவர்ணக் கீர்த்தனைகளைத் தருக.

**2.** பின்வரும் இராகங்களுள் ஏதேனும் **ஓர்** இராகத்தின் இலட்சணத்தை விரிவாக எழுதுக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் என்பன உள்ளடக்கப்படல் வேண்டும்.)

(i) பந்துவராளி

(ii) ஆரபி

(iii) தோடி

**3.** பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றி விரிவான விளக்கம் தருக.

(i) தானவர்ணம்

(ii) அப்பியாச கானம்

(iii) கால அளவைக் காட்டும் குறியீடுகள்

**4.** தவில் வாத்தியம் தொடர்பான பின்வரும் வினாக்களுக்கு விடையளிக்குக.

(i) தவில் வாத்தியத்தின் படத்தினை வரைந்து அதன் பாகங்களைக் குறிப்பிடுக.

(ii) இவ்வாத்தியத்தின் அமைப்பினை விளக்குக.

(iii) இவ்வாத்தியத்தை வாசிக்கும் முறையினை விளக்குக.

(iv) இவ்வாத்தியத்தின் சிறப்பம்சங்கள் **இரண்டினைத்** தருக.

(v) இவ்வாத்தியத்தை வாசித்துப் பிரபல்யமடைந்த நால்வரின் பெயர்களைக் குறிப்பிடுக.

5. கோபால கிருஷ்ண பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றினையும் அவரது இசைப்பணிகளையும் பின்வரும் விடயங்களின் கீழ் ஆராய்க.

(i) பிறந்த இடமும், வருடமும்

(ii) அவரது இளமைக்காலம்

(iii) அவரது இசைப்பணி

(iv) அவரது பிரதான சீடர்கள் இருவர்

6. (i) சாபு தாளத்தின் வகைகளைக் கூறி அவற்றினை உதாரணங்களுடன் விளக்குக.

(ii) சப்த தாளங்களில் மட்டிய தாளம், அட தாளம் என்பன ஜாதி பேதம் அடையும் முறையினை அட்டவணைப்படுத்துக.

7. நீர் பார்த்து இரசித்த கர்நாடக இசைக்கச்சேரி ஒன்றினைப் பின்வரும் விடயங்களின் கீழ் விமர்சிக்குக.

(i) பக்க வாத்தியங்களும், மேடையமைப்பும்

(ii) உருப்படிகளின் தெரிவு

(iii) கலைஞனின் பாடும் திறன்

(iv) சபையோரின் ரசனையும் பாராட்டுக்களும்

**அல்லது**

இந்தியாவின் கர்நாடக இசை வரலாற்றில் 16 ஆம், 17 ஆம் நூற்றாண்டுகளின் கலாசாரப் பின்னணி பற்றி ஆராய்க.

❊❊❊

**வினா இலக்கம் 1 இற்கான குறிக்கோள்**

**உருப்படிகள், வாக்கேயக்கார்கள், சப்ததாளங்கள், இராக இலட்சணம், இந்திய சங்கீதம், வாத்தியக்கருவிகள் போன்றவை பற்றிய அறிவினை வெளிப்படுத்துவார்.**

1. பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை தருக.
   (i) வேத. பூ. என்னும் சங்கேதத்தினால் குறிப்பிடப்படும் இராகம் யாது?
   (ii) 'தாரரந்திரம்' என்னும் பாகத்தையுடைய வாத்தியம் யாது?
   (iii) அப்பியாசகான உருப்படிகளுள் சாகித்திய ரூபமாகப் பாடப்படும் முதல் உருப்படி யாது?
   (iv) மேகராகக்குறிஞ்சிப் பண்ணிற்கு இணையான இராகம் யாது?
   (v) 'மாதர் மடப்பிடியும்' என்ற பதிகத்திற்கு யாழ் வாசித்தவர் யார்?
   (vi) முதன் முதலில் முனித பார்வைக்கு வந்த பிரதிமத்யம ராகம் யாது?
   (vii) கோவூர்ப் பஞ்சரத்தினைக் கீர்த்தனைகளை இயற்றியவர் யார்?
   (viii) நாட்டுப் பாடல் முறையில் 'கண்ணன் குழல் வாரக் காக்கையை அழைத்தல்' என்னும் பாசுரத்தைப் பாடியவர் யார்?
   (ix) மகேந்திரவர்மன் காலத்தின் இசை வளர்ச்சியை வெளிப்படுத்தும் இரண்டு இசைக் கல்வெட்டுக்களும் யாவை?
   (x) முத்துஸ்வாமி தீஷிதர் இயற்றிய இரண்டு நவாவர்ணக் கீர்த்தனைகளைத் தருக.

| | | |
|---|---|---|
| I. | கரஹரப்பிரியா | **(01புள்ளி)** |
| II. | புல்லாங்குழல் | **(01புள்ளி)** |
| III. | கீதம் | **(01புள்ளி)** |
| IV. | நீலாம்பரி | **(01புள்ளி)** |
| V. | திருநீலகண்ட யாழ்ப்பாணர் | **(01புள்ளி)** |
| VI. | கல்யாணி | **(01புள்ளி)** |
| VII. | தியாகராஜசுவாமிகள் | **(01புள்ளி)** |
| VIII. | பெரியாழ்வார் | **(01புள்ளி)** |
| IX. | குடுமியான்மலைக் கல்வெட்டு, திருமயம் கல்வெட்டு | **(02புள்ளிகள்)** |
| X. | கமலாம்பா நவாவர்ணம், அபயாம்பா நவாவர்ணம், சிவ நவாவர்ணம், | **(02புள்ளிகள்)** |

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 1+1+1+1+1+1+1+1+2+2 = 12 புள்ளிகள்**

| |
|---|
| **வினா 02 இற்கான குறிக்கோள்**<br>**இராகத்தின் இலட்சணங்களை விளக்குவார்.** |

**2.** பின்வரும் இராகங்களுள் ஏதேனும் ஓர் இராகத்தின் இலட்சணத்தை விரிவாக எழுதுக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் என்பன உள்ளடக்கப்படல் வேண்டும்.)
(i) பந்துவராளி
(ii) ஆரபி
(iii) தோடி

(i) பந்துவராளி

- 51 ஆவது மேளகர்த்தா இராகம் எனக் கொடுக்கப்பட்டிருப்பின் **(01 புள்ளி)**
- ஆரோஹணம் : ஸரிகமபதநிஸ்

  அவரோஹணம் : ஸ்நிதபமகரிஸ எனக் குறிப்பிட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**

**ஸ்வரஸ்தானங்கள் :**

ஸட்ஜம், சுத்த ரிஷபம், அந்தர காந்தாரம், பிரதி மத்யமம், பஞ்சமம், சுத்த தைவதம், காகலி நிஷாதம் எனக் குறிப்பிடப்பட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**

- எல்லா ஸ்வரங்களும் இராகச்சாயா ஸ்வரங்கள், நியாஸ ஸ்வரங்களாகும்.
- ஸ, ப, நி ஸ்வரங்களில் உருப்படிகள் ஆரம்பிக்கும்.
- பதமா, தஸ்நிதபம ஆகியவை விஷேட சஞ்சாரங்களாகும். **(01 புள்ளி)**

- ஸர்வஸ்வர கமகவரிக ரக்திராகம்.
- பிரசித்தமான பிரதிமத்திம இராகம்.
- தாரஸ்தாயி காந்தாரத்திற்கு மேல் சஞ்சாரம் காண்பது அரிது.
- மாயாமாளவகௌளையின் நேர் பிரதிமத்யம இராகமாகும்.
- சாயாலக இராகங்களில் ஒன்று.
- மூர்ச்சனாகாரக இராகம். இதன் நிஷாத மூர்ச்சனையே கனகாங்கி இராகமாகும்.
- பண்- சாதாரி, நட்டராகம் என்பவற்றிற்கு ஒப்பான இராகம்.
- ஹிந்துஸ்தானி இசையில் "பூர்விதாட்" எனப்படும் இராகம்.
- கருணைச்சுவையை வெளிப்படுத்தும் இராகமாகும்.
- கடபயாதி ஸங்க்யைக்காக "காமவர்த்தனி" என அழைக்கப்படுகிறது.
- விஸ்தாரமான ஆலாபனைக்கு இடம் கொடுக்கும் இராகம்.
- எப்பொழுதும் பாடலாம். **(03 புள்ளிகள்**

**சஞ்சாரம்**

பொருத்தமான ஸ்தாயிக் குறியீடுகளைப் பயன்படுத்தி சஞ்சாரம் எழுதப்பட்டிருப்பின் **(01 புள்ளி)**

**உருப்படிகள்**

| | |
|---|---|
| வர்ணம் | - ஸாமிநின்னே |
| கிருதி | - சம்போமஹாதேவ |
| கிருதி | - நின்னருள் இயம்பலாகுமோ |
| கிருதி | - சிவசிவ சிவயென |
| கிருதி | - நின்னேநெரநம்மி |
| கீரத்தனை | - அள்ளி உண்டிடலாம் |

**(02 புள்ளிகள்)**

**மொத்தம் 1+2+2+1+3+1+2 = 12 புள்ளிகள்**

(ii). **ஆரபி**

- 29 ஆவது மேளமான சங்கராபரணத்தின் ஜன்னியம் எனக் குறிப்பிட்டிருப்பின் **(01 புள்ளி)**
- ஆரோஹணம் : ஸரிமபதஸ்
  அவரோஹணம் : ஸ்நிதபமகரிஸ எனக் குறிப்பிட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**

  **ஸ்வரஸ்தானங்கள் :**
  ஸட்ஜம், சதுஸ்ருதி ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சதுஸ்ருதி தைவதம், காகலி நிஷாதம் எனக் குறிப்பிடப்பட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**
- இராகச்சாயா ஸ்வரங்கள் - ரிஷபம், மத்திமம், தைவதம்
- நியாச ஸ்வரங்கள் - ரிஷபம், பஞ்சமம்
- கம்பித ஸ்வரங்கள் - ரிஷபம், தைவதம்
- கிரஹ ஸ்வரங்கள் - ரிஷபம், பஞ்சமம், தைவதம்

**(01 புள்ளி)**

- வர்ஜராகம், ஆரோகணத்தில் மட்டும் காந்தாரம், நிஷாதம் வர்ஜம்.
- கமகவரிக ரக்திராகம்.
- திரிஸ்தாயி இராகம்.
- ஔடவ சம்பூர்ணராகம், உபாங்கராகம்.
- கனராகம். பிரசித்தி பெற்ற கனபஞ்சக இராகங்களில் இதுவும் ஒன்றாகும்.
- இந்த இராகத்தின் சாயலை மத்திமகாலம் அல்லது தானம் வாசிப்பதன் மூலம் எளிதாக விளங்கிக் கொள்ளலாம்.
- நிஷாதம், காந்தாரம் இவ் இராகத்தின் அல்ப ஸ்வரங்கள். நிஷாதம் இல்லாமலே சில உருப்படிகள் உள்ளன.
- காந்தாரம் ஒரு துர்பல ஸ்வரமாகும். இதனை தீர்க்கமாகவோ, அழுத்தமாகவோ, ஜண்டையாகவோ பிடிப்பது பொருந்தாது.
- மா, கரிஸரி என்பது ஒரு விஷேட ரஞ்சகப் பிரயோகமாகும்.
- எப்பொழுதும் பாடலாம்.
- மங்களகரமான இராகம்.
- கச்சேரியின் ஆரம்பத்தில் பாடத் தகுதியான இராகம்.
- மூர்ச்சனாகாரக ஜன்னிய இராகம்.
- இதன் ரி, ம, ப ஸ்வரங்களை கிரஹபேதம் செய்ய முறையே ஆபேரி, மோகன கல்யாணி, கேதாரகௌளை இராகங்கள் உண்டாகும்.
- பண் - பழந்தக்க ராகம்.
- ரௌத்திர ரஸம் பொருந்திய இராகம்.
- ஸ்ஸ் தத பப மப பம கரிரி போன்ற நிஷாத வர்ஜப் பிரயோகங்கள் இராக ரஞ்சகமானவை. **(03 புள்ளிகள்)**

**சஞ்சாரம்**

பொருத்தமான ஸ்தாயிக் குறியீடுகளைக் பயன்படுத்தி சஞ்சாரம் எழுதப்பட்டிருப்பின் **(01 புள்ளி)**

**உருப்படிகள்**

- கீதம் - வாரணமுகா - ஆதி
- வர்ணம் - அன்னமே - ஆதி
- வர்ணம் - ஸ்வாமி உன்னை - ஆதி
- பஞ்சரத்தினம் - ஸாதிஞ்சனே - ஆதி
- கிருதி - ஸ்ரீசரஸ்வதி - ரூபகம்
- கிருதி - ஒருக்கால் சிவ - ஆதி

**(02 புள்ளிகள்)**

**மொத்தம் 1+2+2+1+3+1+2 = 12 புள்ளிகள்**

**(iii) தோடி**

- 8 ஆவது மேளகர்த்தாராகம் எனக் கொடுக்கப்பட்டிருப்பின் **(01 புள்ளி)**
- ஆரோஹணம் : ஸரிகமபதநிஸ்
  அவரோஹணம் : ஸ்நிதபமகரிஸ எனக் குறிப்பிட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**

**ஸ்வரஸ்தானங்கள் :**

ஸட்ஜம், சுத்த ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சுத்த தைவதம், கைஷிகி நிஷாதம் எனக் குறிப்பிடப்பட்டிருப்பின் **(02 புள்ளிகள்)**

- இராகச்சாயா ஸ்வரங்கள் - க, ம, த **(01 புள்ளி)**

- மூர்ச்சனாகாரக மேள இராகம்.
- ரி, க, ம, த, நி ஸ்வரங்களை கிரகபேதம் செய்ய முறையே கல்யாணி, ஹரிகாம்போஜி, நடபைரவி, சங்கராபரணம், கரஹரப்பிரியா ஆகிய மேளங்கள் ஒலிக்கும்.
- எல்லா உருப்படிகளையும் இந்த இராகத்தில் காணலாம்.
- சுலோகங்கள், பத்யங்கள், விருத்தங்கள் பாடுவதற்கு ஏற்ற இராகம்.
- ஸர்வ ஸ்வர கமக வரிக ரக்தி இராகம்.
- விஸ்தாரமான ஆலாபனைக்கு இடம் கொடுக்கும் இராகம்.
- தோடி ஸீதாராமய்யர் இந்த இராகத்தைப் பாடுவதில் தேர்ச்சி பெற்றவர்.
- கடபயாதி ஸங்க்யைக்காக ஹனுமதோடி என்று அழைக்கப்பட்டது.
- எல்லா ஸ்வரங்களும் கோமள ஸ்வரங்களாக காணப்படும்.
- பஞ்சம வர்ஜ ஜண்டை ஸ்வரப்பிரயோகங்களும் நிக்ரிநி – தநிரிநிதம ககமநிதமகரிஸ போன்ற தாட்டு ஸ்வரப்பிரயோகங்களும் இராக ரஞ்சகமானவை.
- தரிஸ்தா ரிஸ்தா போன்ற சஞ்சாரங்கள் விசேட பிரயோகங்களாகும்.
- பஞ்சமத்தில் நின்று சஞ்சாரம் செய்யலாம்.
- புராதன சங்கீதக் கிரந்தங்களில் காணப்படும் இராகம்.
- எப்பொழுதும் பாடக்கூடிய இராகம்.
- திரிஸ்தாயி இராகம்
- இசை நாடகங்கள், நிருத்திய நாடகங்கள் என்பவற்றில் உபயோகிக்கப்படும் இராகம்.
- ஹிந்துஸ்தானி இசையில் பைரவி தாட் என அழைக்கப்படும் இராகம்.

**(03 புள்ளிகள்)**

**சஞ்சாரம்**

பொருத்தமான ஸ்தாயிக் குறியீடுகளைப் பயன்படுத்தி சஞ்சாரம் எழுதப்பட்டிருப்பின் **(01 புள்ளி)**

**உருப்படிகள்**

| | | |
|---|---|---|
| கீதம் | - கலைமகளே | - ரூபகம் |
| வர்ணம் | - ஏராநாபை | - ஆதி |
| வர்ணம் | - கனகாங்கி | - அட |
| கிருதி | - தாசரதே | - ஆதி |
| கிருதி | - கடைக்கண் நோக்கி | - ஆதி |
| பதம் | - எல்லா அருமைகளும் | - ஆதி |

**(02 புள்ளிகள்)**

**மொத்தம் 1+2+2+1+3+1+2 = 12 புள்ளிகள்**

**இவ்வினாவிற்குரிய மொத்தம் = 12 புள்ளிகள்**

**வினா 3 இற்கான குறிக்கோள்**

**தான வர்ணத்தின் இலட்சணம், இயற்றியவர், உதாரணம் போன்றவற்றையும், அப்பியாசகானம். கால அளவைக் காட்டும் குறியீடுகள் தொடர்பான விரிவான விளக்கத்தினை விளக்குவார்.**

3. பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றி விரிவான விளக்கம் தருக.
   (i) தானவர்ணம்
   (ii) அப்பியாச கானம்
   (iii) கால அளவைக் காட்டும் குறியீடுகள்

**1. தானவர்ணம்**

- அப்பியாசகான உருப்படி வகைகளினுள் வர்ணம் முக்கியமானதாகும்
- வர்ணங்களை அப்பியாசம் செய்வதன் மூலம் உருப்படிகளை அழகுபடுத்தி, மெருகுடனும், கமகத்துடனும் பாடவும், வாசிக்கவும் முடியும்.
- இதன் சாகித்தியமானது பக்தி விஷயமாகவோ, சிருங்கார விஷயமாகவோ, சங்கீத வித்துவான்களை ஆதரித்த பிரபுக்களைப் பற்றியதாகவோ இருக்கும்.
- வர்ணங்களின் பல்லவி, அனுபல்லவி, முக்தாயிஸ்வரம் என்பவை பூர்வாங்கப் பகுதியாகவும், சரணம், சரணஸ்வரங்கள் என்னும் அங்கங்கள் உத்தராங்கப் பகுதியாகவும் குறிப்பிடப்படும்.
- தான வர்ணத்தில் வார்த்தைகள் குறைவாகக் காணப்படும்.
- தானஜாதி சஞ்சாரங்களுடன் பிரகாசிக்கும் உருப்படியே தானவர்ணம்.
- பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகிய பகுதிகளுக்கு மாத்திரம் சாகித்தியம் காணப்படும்.
- சரணத்தினை எத்துக்கடைப் பல்லவி, உபபல்லவி, சிட்டைப்பல்லவி எனவும், சரண ஸ்வரங்களை எத்துக்கடை ஸ்வரங்கள், சிட்டை ஸ்வரங்கள் எனவும் குறிப்பிடுவர்.
- தானவர்ணங்களை கச்சேரிகளின் ஆரம்பத்தில் பாடினால் கச்சேரி விரைவில் களை கட்டும்.
- இவ்வர்ணத்தை இரண்டு காலங்களிலும் பாடவும், வாசிக்கவும் முடியும்.
- தானவர்ணமுறையில் அமைந்த இராகமாலிகா வர்ணங்களும் உள்ளன.

- தானவர்ணங்கள் ஆதிதாளம், அடதாளம், ஜம்பைதாளம் போன்ற தாளங்களில் இயற்றப்பட்டுள்ளன.
- தானவர்ணம் இயற்றியவர்கள்: பச்சிமிரியம் ஆதியப்பய்யர்,சியாமா சஸ்திரிகள், பல்லவி கோபாலய்யர், ஸ்வாதிதிருநாள்மகாராஜா, வீணைகுப்பையய்யர், டைகர் வரதாச்சாரியார், இராமநாதபுரம் ஸ்ரீனிவாஸஐயங்கார்.
- உதாரணங்கள் :

  அன்னமே - ஆரபி - ஆதி
  முருகா உன்மேல் - மத்தியமாவதி - ஆதி
  சுவாமி உன்னை - ஆரபி - ஆதி

**மொத்தம் 06 புள்ளிகள்**

**II. அப்பியாசகானம்**

- சங்கீதத்தை கற்பதற்கும், குரல் பயிற்சிக்காகவும் பாடப்படுகின்ற உருப்படிகள் அப்பியாசகானம் எனப்படும்.
- அப்பியாசகான உருப்படிகளை நன்கு பயிற்சி செய்வதன் மூலம் சபாகான உருப்படிகளை மெருகுடனும், கமகத்துடனும் பாடமுடியும்
- வர்ணம் அப்பியாசகானத்திற்கும், சபாகானத்திற்கும் பொதுவான உருப்படி ஆகும்.
- ஸ்வராவளி வரிசைகள், ஜண்டை வரிசைகள், அலங்காரங்கள், கீதங்கள், ஸ்வரஜதி, ஜதீஸ்வரம், வர்ணம் போன்ற உருப்படிகள் அப்பியாசகானத்திற்குள் அடங்கும்.

**மொத்தம் 06 புள்ளிகள்**

**III. கால அளவைக் காட்டும் குறியீடுகள்**

குறில் ஸ்வரம் - ஸ / , - 1 அட்சரகாலம்
நெடில் ஸ்வரம் - ஸா / ; - 2 அட்சரகாலம்

ஒரு ஸ்வரத்தின் மேல் ஒரு படுக்கைக்கோடு போடப்பட்டிருப்பின் அந்த ஸ்வரத்தின் அட்சரகாலம் ½ ஆகும். இரண்டு படுக்கைக் கோடுகள் போடப்பட்டிருப்பின் அதன் அட்சரகாலம் ¼ ஆகும்.

உதாரணம்: ஸ - 1 அட்சரகாலம்
$\overline{\text{ஸ}}$ - ½ அட்சரகாலம்
$\overline{\overline{\text{ஸ}}}$ - ¼ அட்சரகாலம்

மொத்தம் 06 புள்ளிகள்

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 6 + 6 = 12 புள்ளிகள்**

| |
|---|
| வினா 04 இற்கான குறிக்கோள் |
| **தவில் வாத்தியத்தின் படத்தினை வரைந்து பாகங்களைக் குறிப்பிட்டு வாத்தியத்தின் சிறப்பு, அமைப்பு, வாசிக்கும் முறை என்பவற்றை விளக்கி பிரபல்யமான இசைக் கலைஞர்களையும் குறிப்பிடுவார்.** |

**4.** தவில் வாத்தியம் தொடர்பான பின்வரும் வினாக்களுக்கு விடையளிக்குக.

(i) தவில் வாத்தியத்தின் படத்தினை வரைந்து அதன் பாகங்களைக் குறிப்பிடுக.

(ii) இவ்வாத்தியத்தின் அமைப்பினை விளக்குக.

(iii) இவ்வாத்தியத்தை வாசிக்கும் முறையினை விளக்குக.

(iv) இவ்வாத்தியத்தின் சிறப்பம்சங்கள் இரண்டினைத் தருக.

(v) இவ்வாத்தியத்தை வாசித்துப் பிரபல்யமடைந்த நால்வரின் பெயர்களைக் குறிப்பிடுக.

**(i)**




தவில் வாத்தியத்தின் படம் வரைந்து பாகங்களைச் சரியாகக் குறிப்பிட்டிருப்பின்
படம் - 02 புள்ளிகள்
பாகங்கள் - 02 புள்ளிகள்

**(04 புள்ளிகள்)**

### (ii) வாத்தியத்தின் அமைப்பு

- தவிலானது பலாமரத்தின் உருளை வடிவமான குற்றியின் உட்புறத்தை குடைந்தெடுத்து, பின்னர் அதன் இரு புறமும் தோலால் மூடப்பட்டு உருவாக்கப்படும்.
- இருபக்கங்களும் முறையே வலந்தலை, இடந்தலை என அழைக்கப்படுகின்றன. வலந்தலை இரண்டு தோல்களாலும், இடந்தலை ஒரு தோலாலும் மூடப்பட்டிருக்கும்.
- இத்தோல்கள் ஆட்டுத்தோலால் ஆனவை. தவில் வார்கள் எருமைத் தோலால் செய்யப்பட்டு இறுக்கிக் கட்டப்பட்டிருக்கும்.
- மூங்கில் வளையங்கள் தவிலின் இரு புறங்களிலும் பொருத்தப்படும். ஒலி எழுப்பும் தோற்பகுதிகள் அவ்வளையங்களில் இணைத்துச் சுற்றப்பட்டிருக்கும்.
- வலது கைவிரல்களால் வாசிக்கப்படும் அகன்ற தோற்பகுதிக்கு "வலந்தலை" என்று பெயர்.
- அதே போன்று இடது கையில் குச்சியால் (கழி) அடித்து வாசிக்கப்படும் பகுதிக்கு "இடந்தலை" என்று பெயர். இது தொப்பி எனவும் அழைக்கப்படுகின்றது.
- இவ்விரு தோற்பகுதிகளிலும் வார்கள் நுழைவதற்கு ஏற்றவாறு 11 துவாரங்கள் காணப்படுகின்றன.
- இத்துளைகள் கண்கள் என அழைக்கப்படுகின்றது. இவற்றினிடையே வார்க்கற்றைகள் நுழைக்கப்பட்டு வளையங்களுடன் இறுக்கி கட்டப்படுகின்றன.
- தற்காலத்தில் தோல்வார்களுக்குப் பதிலாக உலோக வார்கள் பயன்படுத்தப்படுகின்றன. தவில் வாத்தியத்தை கட்டியுள்ள நாடாவை இணைக்கும் வளையத்தின பெயர் "வெண்டயம்" ஆகும். இது பஞ்ச உலோகங்களினால் ஆனது.
- தவில் கழி திருவாச்சி மரக்கொம்பினால் செய்யப்படுகின்றது. இது 12 அங்குல நீளமுடையது.

**(04 புள்ளிகள்)**

### (iii) வாசிக்கும் முறை

- இது இடந்தலையில் கழி எனப்படுகின்ற சிறு கோலினாலும், வலந்தலையில் கூடுகள் அணிந்த விரல்களாலும் வாசிக்கப்படுகின்றது.
- இடது கையில் கழி இருந்த போதிலும் மணிக்கட்டு வரையும் உபயோகித்து வாசிக்கப்படுகின்றது.

**(01 புள்ளி)**

### (iv) சிறப்புகள்

- நாதஸ்வரத்திற்கும் கிளாரினெட்டுக்கும் தாள வாத்தியமாக வாசிக்கப்டுகின்றது.
- மங்கள இசையில் முக்கிய கருவியாக விளங்குகின்றது.
- சுபகாரியங்கள் மற்றும் திருவிழாக்களில் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றது.
- ஒரு பக்கம் கழியினாலும், மறுபக்கம் விரல்களினாலும் வாசிக்கப்படுகின்ற அதத விதத வாத்தியமாக விளங்குகின்றது.
- இராஜ வாத்தியமாக விளங்குகின்றது.
- மங்கள நிகழ்வான தாலிகட்டுதல், கங்கணம் கட்டுதல் போன்ற நிகழ்வுகளில் உரத்த இசையில் (கெட்டிமேளம்) வாசிக்கப்படுகின்றது.

- தொன்மை வாய்ந்த தோற்கருவியாக விளங்குகின்றது.
- திறந்தவெளி அரங்குகளில் வாசிக்க உகந்த வாத்தியம்.
- லய வின்னியாசம் செய்யும் போது இரசனை ஊட்டுவதற்காக வலந்தலையில் கழியினாலும், கையினாலும் ஒருவித ரஞ்சகமான வாசிப்பு வாசிக்கப்படுகின்றது.
- தவில் சுருதி சேர்த்து வாசிக்க முடியாத வாத்தியம் எனினும், நாதஸ்வரத்தின் சுருதிக்குத் தக்கவாறு சுருதி சேர்க்கப்பட்டு வாசிக்கப்படுகின்றது.
- தவிலானது நாதஸ்வரம், ஒத்து, தாளம் போன்ற கருவிகளுடன் வாசிக்கப்படுகின்றது.

**(01 புள்ளிகள்)**

**வாசித்துப் பிரபல்யமடைந்தவர்கள்**

அம்மா சத்திரம் கண்ணுசாமிப்பிள்ளை,
அம்மாப்பேட்டை பக்கிரிசாமிப்பிள்ளை
திருக்கருகாவூர் சிவகுருநாதபிள்ளை
காரைக்கால் மலைப்பெருமாள்பிள்ளை
வழுவூர் முத்துவீரப்பிள்ளை,
ஸ்ரீவாஞ்சியம் கோவிந்தப்பிள்ளை
நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை
வலங்கைமான் சண்முகசுந்தரம்
அளவையூர் தட்சணாமூர்த்தி
இணுவில் சின்னராசா

(02 புள்ளிகள்)

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 4+4+1+1+2 = 12 புள்ளிகள்**

**வினா 5 இற்கான குறிக்கோள்**

**கோபாலகிருஷ்ண பாரதியார் பிறந்த இடம், வருடம், இளமைக்காலம், வாழ்க்கை வரலாறு, இசைப்பணி பற்றி விபரித்து சீடர்களின் பெயர்களையும் குறிப்பிடுவார்.**

5. கோபால கிருஷ்ண பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றினையும் அவரது இசைப்பணிகளையும் பின்வரும் விடயங்களின் கீழ் ஆராய்க.
   (i) பிறந்த இடமும், வருடமும்
   (ii) அவரது இளமைக்காலம்
   (iii) அவரது இசைப்பணி
   (iv) அவரது பிரதான சீடர்கள் இருவர்

**(i)** பிறந்த வருடம் - 1810
பிறந்த இடம் - நாகபட்டினத்தில் நரிமணம் எனும் ஊரில் பிறந்தார்.

**(01 புள்ளி)**

**(ii) இளமைக்காலம்**

- கோவிந்தசிவத்திடம் சாஸ்திரங்கள், யோகங்களைப் பயின்றார்.
- பல இசை அரங்குகளில் ஹரிகதை கேட்டுப் பயனடைந்தார்.
- ஹிந்துஸ்தானி இசைவித்துவான் இராமதாஸ் என்பவரிடம் ஹிந்துஸ்தான் இசையைக் கற்றார்.

- கனம் கிருஸ்ணய்யரிடம் கர்நாடக இசையை முறையாகக் கற்றார்.
- இவரை ஆதரித்த மிராசுதாரர் அண்ணுஐயரின் உதவியால் காலட்சேபம் செய்து பணம் சம்பாதித்தார்.

**(03 புள்ளிகள்)**

**(iii) இசைப்பணி**

- கர்நாடக, ஹிந்துஸ்தானி இசையில் தேர்ச்சி பெற்றிருந்ததால் புதிய வர்ணமெட்டுக்களுடன் கூடிய அனேக பாடல்களைப் பாடியுள்ளார்.
- “கோபாலகிருஸ்ண” என்ற முத்திரையுடன் அனேக கீர்த்தனைகளை இயற்றியுள்ளார்.
- சேக்கிழார் எழுதிய பெரியபுராணத்திலிருக்கும் 37 செய்யுள்களில் நந்தனார் சரித்திரத்தை “நந்தனார் சரித்திரம்” எனும் இசைநாடகமாக எழுதினார்.
- இவருடைய ஏனைய இசை நாடகங்கள்
  இயற்பகை நாயனார் சரித்திரம்,
  காரைக்கால் அம்மையார் சரித்திரம்,
  திருநீலகண்ட நாயனார் சரித்திரம் ஆகும்.
- இதில் அழகிய கீர்த்தனங்களும், நொண்டிச்சிந்து, ஆனந்தகளிப்பு, இருசொல் அலங்காரம், லாவணி, தண்டகம் முதலிய இசை முறைகளும் கையாளப்பட்டுள்ளன.
- சிறுவர்கள் மனம் பண்படும் பொருட்டு கும்மி, கோலாட்டம், ஊஞ்சல், நலங்கு. லாலி போன்ற பாடல்களைப் பாடியுள்ளார்.
- தியாகராஜசுவாமிகளின் தூண்டுதலால் “சபாபதிக்கு வேறு தெய்வம்” என்ற ஆபோகி இராகக் கீர்த்தனையைப் பாடியுள்ளார்.
- புதிய வர்ணமெட்டுக்களுடன் கூடிய அனேக பக்திப்பாடல்களை இயற்றியுள்ளார்.
- தியாகராஜ சுவாமிகளைப் பின்பற்றி தமிழிலில் பஞ்சரத்தின கீர்த்தனைகளை இயற்றியுள்ளார்.

| | |
|---|---|
| ஹரஹர | - நாட்டை |
| சரணாகதம் என்று | - கௌளை |
| பிறவாத வரம் | - ஆரபி |
| ஆடிய பாதமே கதி | - வராளி |
| மறவாமல் எப்படியும் | - ஸ்ரீ |

**(06 புள்ளிகள்)**

**(iv) சீடர்கள்**

சிதம்பரம் பொன்னுச்சாமி தீட்ஷிதர்
சிதம்பரம் ஸ்ரீராஜரத்தின தீட்ஷிதர்
மாயூரம் இராமசாமி ஐயர்
மாயுரம் நடேசய்யர்
மாயூரம் சுப்பிரமணிய ஐயர்

**(02 புள்ளிகள்)**

**இவ்வினவிற்குரிய மொத்தம் 1+3+6+2 = 12 புள்ளிகள்**

**வினா 06 இற்கான குறிக்கோள்**

**சாபு தாளத்தின் வகைகளைக் கூறி அவற்றினை உதாரணத்துடன் விளக்குவார்.**

**சப்த தாளங்களில் மட்டிய தாளம், அட தாளம் என்பன ஜாதி பேதமடையும் முறையினை அட்டவணைப்படுத்துவார்.**

6. (i) சாபு தாளத்தின் வகைகளைக் கூறி அவற்றினை உதாரணங்களுடன் விளக்குக.
   (ii) சப்த தாளங்களில் மட்டிய தாளம், அடதாளம் என்பன ஜாதி பேதம் அடையும் முறையினை அட்டவணைப்படுத்துக.

**(i) சாபு தாளத்தின் வகைகள்:**

**திஸ்ர சாபு :**

- இது ஆவர்த்தனத்திற்கு (1+2=3) மூன்று எண்ணிக்கைகளைக் கொண்டது.
- முதல் தட்டுக்கு ஒரு எண்ணிக்கையும், இரண்டாம் தட்டுக்கு இரண்டு எண்ணிக்கைகளுமாகும்,
- இத்தாளத்திற்குரிய ஜதிச்சொல் த கிட
- உதாரணம் : சின்னஞ் சிறு கிளியே

**கண்ட சாபு :**

- இது ஆவர்த்தனத்திற்கு (2+3=5) ஐந்து எண்ணிக்கைகளைக் கொண்டது.
- முதல் தட்டுக்கு இரு எண்ணிக்கையும், இரண்டாம் தட்டுக்கு மூன்று எண்ணிக்கைகளுமாகும்,
- இத்தாளத்திற்குரிய ஜதிச்சொல் தக தகிட
- உதாரணம் : பரிதான மிச்சிதே (பிலஹரி இராகம்)
  குருலேக எடுவண்டி (கௌரி மனோகரி இராகம்)
  ஏறுமயில் - திருப்புகழ்

**மிஸ்ர சாபு :**

- இது ஆவர்த்தனத்திற்கு (3+4=7) ஐந்து எண்ணிக்கைகளைக் கொண்டது.
- முதல் தட்டுக்கு மூன்று எண்ணிக்கைகளும், இரண்டாம் தட்டுக்கு நான்கு எண்ணிக்கைகளுமாகும்,
- இத்தாளத்திற்குரிய ஜதிச்சொல் தகிட தகதிமி
- உதாரணம் : நிதிசால ஸுகமா (கல்யாணி இராகம்)
  நீ சித்தமு (தன்யாசி இராகம்)

**சங்கீரண சாபு :**

- இது ஆவர்த்தனத்திற்கு (4+5=9) ஐந்து எண்ணிக்கைகளைக் கொண்டது.
- முதல் தட்டுக்கு நான்கு எண்ணிக்கைகளும், இரண்டாம் தட்டுக்கு ஐந்து எண்ணிக்கைகளுமாகும்,
- இத்தாளத்திற்குரிய ஜதிச்சொல் தகதிமி தகதகிட
- உதாரணம் : அபூர்வமான சில பல்லவிகளில் இத்தாளங்கள் காணப்படும்.

**(08 புள்ளிகள்)**

(ii) சப்த தாளங்களில் மட்டிய தாளம், அடதாளம் என்பன ஜாதி பேதம் அடையும் முறையினை அட்டவணைப்படுத்துக.

| மட்டியதாளம் | 1 0 1 | |
|---|---|---|
| திஸ்ரஜாதி மட்டியதாளம்<br>சதுஸ்ரஜாதி மட்டியதாளம்<br>கண்டஜாதி மட்டியதாளம்<br>மிஸ்ரஜாதி மட்டியதாளம்<br>சங்கீர்ணஜாதி மட்டியதாளம் | $1_3\ 0\ 1_3$<br>$1_4\ 0\ 1_4$<br>$1_5\ 0\ 1_5$<br>$1_7\ 0\ 1_7$<br>$1_9\ 0\ 1_9$ | 3 + 2 + 3 = 08<br>4+ 2 + 4 = 10<br>5+ 2 + 5 = 12<br>7 + 2 + 7 = 16<br>9 + 2 + 9 = 20 |

| அட தாளம் | 1 1 0 0 | |
|---|---|---|
| திஸ்ரஜாதி அட தாளம்<br>சதுஸ்ரஜாதி அட தாளம்<br>கண்டஜாதி அட தாளம்<br>மிஸ்ரஜாதி அட தாளம்<br>சங்கீர்ணஜாதி அட தாளம் | $1_3\ 1_3\ 0\ 0$<br>$1_4\ 1_4\ 0\ 0$<br>$1_5\ 1_5\ 0\ 0$<br>$1_7\ 1_7\ 0\ 0$<br>$1_9\ 1_9\ 0\ 0$ | 3 +3 + 2+ 2 = 10<br>4+ 4 + 2+ 2 = 12<br>5 + 5 + 2+ 2 = 14<br>7 + 7 + 2+ 2 = 18<br>9 + 9 + 2+ 2 = 22 |

**(04 புள்ளிகள்)**

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 8+4 = 12 புள்ளிகள்**

**வினா 07 இற்கான குறிக்கோள்**

**கர்நாடக இசைக்கச்சேரி ஒன்றினை பார்த்து இரசித்த விடயங்களை விமர்சிப்பார்.**

**இந்தியாவின் கர்நாடக இசை வரலாற்றில் 16 ஆம் 17 ஆம் நூற்றாண்டின் கலாசாரப் பின்னணி பற்றி ஆராய்வார்.**

7. நீர் பார்த்து இரசித்த கர்நாடக இசைக்கச்சேரி ஒன்றினைப் பின்வரும் விடயங்களின் கீழ் விமர்சிக்குக.
   (i) பக்க வாத்தியங்களும், மேடையமைப்பும்
   (ii) உருப்படிகளின் தெரிவு
   (iii) கலைஞனின் பாடும் திறன்
   (iv) சபையோரின் ரசனையும் பாராட்டுக்களும்

அல்லது

இந்தியாவின் கர்நாடக இசை வரலாற்றில் 16 ஆம், 17 ஆம் நூற்றாண்டுகளின் கலாசாரப் பின்னணி பற்றி ஆராய்க.

| | | | |
|---|---|---|---|
| (i) | பக்கவாத்தியங்களும், மேடையமைப்பும் | - | 02 புள்ளிகள் |
| (ii) | உருப்படிகளின் தெரிவு | - | 04 புள்ளிகள் |
| (iii) | கலைஞனின் பாடும் திறன் | - | 04 புள்ளிகள் |
| (iv) | சபையோரின் இரசனையும் பாராட்டுக்களும் | - | 02 புள்ளிகள் |

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 2+4+4+2 = 12 புள்ளிகள்**

**அல்லது**

**இந்தியாவின் கர்நாடக இசை வரலாற்றில் 16 ஆம் 17 ஆம் நூற்றாண்டின் கலாசாரப் பின்னணி பற்றி ஆராய்க.**

- 16 ஆம் நூற்றாண்டில் "சங்கீத பிதாமஹர்" புரந்தரதாஸர் இசைப்பயிற்சிக்குரிய ஸ்வராவளி வரிசைகள், அலங்காரங்கள், கீதங்கள் என்பவற்றை இயற்றி, அப்பியாச கானங்களுக்குரிய வழிமுறைகளை வகுத்தார்.
- புரந்தரதாஸர் கன்னட மொழியில் நூற்றுக்கணக்கான கீர்த்தனைகளையும், தேவர் நாமாக்களையும் "புரந்தர விட்டல" என்னும் முத்திரையுடன் இயற்றினார்.

- புரந்தரதாஸர் ஸ்வராளிவரிசைகள் முதலான ஆரம்ப வரிசைகளை மாயாமாளவகௌளை இராகத்தில் பயில்வதற்குரிய முறையைக் கொண்டு வந்தார்.

- கி.பி. 1550 இல் இராமாமாத்யர் " ஸ்வரமேளகலாநிதி" எனும் சமஸ்கிருத நூலை இயற்றினார்.

- இராமாமாத்யர் 20 மேளங்களைக் குறிப்பிட்டு அதில் மாயாமாளவகௌளை இராகமே மிகச் சிறந்தது எனப் புரந்தரதாஸரின் முடிவை ஏற்றுக் கொண்டார்.

- கி.பி. 1635 இல் வெங்கடமகி அவர்கள் "சதுர்தண்டிப் பிரகாசிகை" என்னும் நூலை இயற்றினார்.

- வெங்கடமகி அவர்கள் 12 ஸ்வர ஸ்தானங்களையும், 16 ஸ்வரப் பெயர்களையும் ஆதாரமாகக் கொண்டு 72 மேளகர்த்தாக்களை வகுத்தார்.

- 17ஆம் நூற்றாண்டில் ஷேத்ரக்ஞர் தெலுங்கு மொழியில், நாயக நாயகி பாவத்தை அடிப்படையாகக் கொண்ட ஆயிரக்கணக்கான பதங்களை இயற்றினார்.

- பக்திமான் பத்ராசல இராமதாஸர் இராகத்தின் மூலம் பக்திப் பிரவாகத்தை வெளிப்படுத்தும் கீர்த்தனைகளை இயற்றினார்.

- முத்துத்தாண்டவர் "பேரின்பப் பதங்கள்" என்று போற்றப்படும் தெய்வத்தின் புகழ் பாடும் கீர்த்தனைகளைத் தமிழில் இயற்றினார்.

- 17 ஆம் நூற்றாண்டில் கோவிந்தாச்சாரியார் "சங்கிரஹ சூடாமணி" என்னும் சமஸ்கிருத நூலை இயற்றினார்.

**(மொத்தம் 12 புள்ளிகள்)**

**இவ்வினாவிற்குரிய மொத்தம் 12 புள்ளிகள்**